ஸ்ரீராமஜயம்.

பொற்களந்தைப்பதி

முத்தமிழ்க்கவி

வீரராகவமுதலியார்

அபிஷேகவல்லித்தாயார்பேரில்

இயற்றிய

# திருக்கண்ணமங்கைமாலை.

---






இஃது

ஊ - புஷ்பரதசெட்டியாரால்

தமது

கலாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை:

1887.






நன்றாக. குருவாழ்க. குருவேதுணை.

# திருக்கண்ணமங்கைமாலை.

துதிகவி.

விரகறிமுத்தமிழ்வீரராகவன்
வரகவிமாலையைவழுத்துந்தோறெலாம்
உரகனும்வாணனுமொக்கக்கூடினால்
சிரகரகம்பிதஞ்செய்யலாகுமே.

காப்பு.

சீர்பூத்தமாலுக்குமாலாக்கும்வல்லிதிருவல்லியிப்
பார்பூத்தவல்லியபிடேகவல்லிபதுமவல்லி
நீர்பூத்தவல்லித்தமிழ்மாலைபாடவென்னெஞ்சிருக்கும்
தார்பூத்ததெய்வப்புளிக்கீழ்விளங்குந்தமிழ்க்கரசே.

பிறைபூத்தவேணியரன்சாபந்தீர்த்தபிரான்புனித
மறைபூத்தபேரழகன்பத்தராவிநன்மார்பிலொரு
சிறைபூத்திருந்துமுன்மேனிபொன்பூத்ததிறமென்னேகாண்
நறைபூத்ததாமரைத்தாளாய்கண்ணமங்கைநாயகியே, (க)

தோடார்விழியருளாலடியேன்செய்ததொல்லைவினைக்
காடானதுசுடுங்காலமுண்டோவண்டுகோல்குடைந்து
பாடாமுரலுந்துழாய்முடியார்பத்தராவிபெற்ற
நாடாளுநின்றதிருவேகணமங்கைநாயகியே. (௨)

வேளுஞ்சிவனும்பிரமனுந்தேவரும்விண்ணுநவக்
கோளுங்கனல்புனல்கால்புவியும்மண்டகோடியும்பெற்
றாளுந்திருவயிற்றன்னையென்றாலுமழகியொரு
காளுங்குறைவணக்குண்டோகணமங்கைநாயகியே. (௩)

விட்டார்க்குமாசைவிடாதார்க்குநீயன்றிவேறுகதி
இட்டாற்றுவதினியில்லைகண்டாயெளியேற்குனது
மட்டார்த்ததாமரைத்தாளேசரணன்றிவைதரணி
கட்டாற்றில்விட்டுவிடாதேகணமங்கைநாயகியே. (௪)

மஞ்சார்கருங்குழலுங்குழையூடெதிவாளுமதிப்
பிஞ்சார்நுதலுந்திலகமுநாசியும்போருள்கொண்
டஞ்சாதமைத்தகரமுஞ்செம்மேனியழகுமுள்ளில்
நஞ்சானதமமுதாமேகணமங்கைநாயகியே. (௫)

காவியும்பூவையுமேகமும்போல்வண்ணன்கண்ணன்கண்ணும்
ஆவியும்போலுமபிடேகவல்லிநின்னஞ்சனக்கண்
ஏவியமுத்தொழின்மூவருங்கேட்பரன்றேயகிலும்
காவியுநாறுங்குழலாய்கணமங்கைநாயகியே. (௬)

பெற்றாருங்கூடப்பிறந்தாருமக்களும்பெண்டிருமட்
டுற்றாரும்வீட்டுக்குறாதுணையோவென்றுயிரளிக்கப்
பற்றுநின்றகுருதேசிகனும்பரகதியும்
கற்றுயுந்தக்கைதபுநீகாண்கணமங்கைநாயகியே. (௭)

கேட்டுக்குமாக்கக்கிளர்வுக்குநின்னிருகெண்டையங்கண்
ஓட்டுக்குள்வைத்தவுபாயமென்றேவுயர்வாலுயர்ந்த

வீட்டுக்கும்லீலாவிபூதிக்குமிந்தவிபூதியிற்சோ
ணாட்டுக்குநாயகப்பெண்ணேகணமங்கைநாயகியே. (அ)

சேதிக்குஞ்சூலமும்பாசமுமாச்சமன்றேடிவந்து
சோதிக்கும்போதுவந்தஞ்சலென்பாய்நறைநாற்றமலர்
கோதிக்குடைந்துமிடைந்தறுகாலளிகோடிசுற்றி
நாதிக்கும்பூங்குழன்மின்னேகணமங்கைநாயகியே. (௯)

காவுக்கழகுமலர்மடமாதர்க்குக்கற்பழகு
கோவுக்கழகுமனுநீதிகார்க்குக்கொடையழகு
பாவுக்கழகுபொருளுஞ்சரிதைபடிக்குமென்றன்
நாவுக்கழகுன்பதங்காண்கணமங்கைநாயகியே. (௧0)

பாடேனுனதுதிருப்புகழ்பாடிடும்பத்தரொடும்
கூடேனுன்கோயில்வலம்புரியேன்செங்கைகூப்பிப்பணிந்
தாடேன்மெய்ஞ்ஞானத்தைத்தேடேனிக்காயமழியுமென்ன
நாடேனுன்சித்தமறியேன்கணமங்கைநாயகியே. (௧௧)

காவிக்குநேருங்கண்பஞ்சடைந்துள்ளங்கலங்கிநனி
கோவிக்குங்காலனுமுன்வரவாக்குங்குழறியுயிர்
பாவிக்குத்துன்பம்வந்தாகங்கிடந்துபதைத்திடவென்
நாவிக்கும்போதுவந்தாள்வாய்கணமங்கைநாயகியே. (௧௨)

வேயகமானதடந்தோளுந்தாளும்வியனருட்குத்
தாயகமானமுகமுந்திருக்கைத்தலங்களுஞ்செவ்
வாயகமானமுறுவலுங்கொங்கைவடமும்ரத்தின
நாயகக்கச்சுமறவேன்கணமங்கைநாயகியே. (௧௩)

வடக்குங்குமமுலைமானார்கண்மோகவலையிற்சிக்கிக்
கிடக்குங்கொடுமனமெந்நாளுன்பாதத்தைக்கிட்டுமந்தோ
கடக்குஞ்சரமன்றளித்தபிரானொடுங்கானின்முன்னம்
நடக்கும்பரிபுரத்தாளாய்கணமங்கைநாயகியே. (௧௪)

தேன்பாய்கமலமலர்வீடொருவித்தினமுமெளி
யேன்பாவகாவினிடம்வீற்றிருந்தருளேகொண்டுநீ
தான்பாடுமாமதுரத்தமிழ்ப்பாட்டைச்சகதலத்தோர்
கான்பாடினதென்பரொன்றேகணமங்கைநாயகியே. (௧௫)

பாலுக்குந்தேனுக்குநேருஞ்செவ்வாயிற்பணிமொழியால்
மாலுக்குமால்வலைபூட்டுவைநின்குணமட்டுளதோ
நாலுக்குமற்றவைநாலுக்கும்பேருலகங்கள்பதி
னாலுக்குநாயகப்பெண்ணேகணமங்கைநாயகியே. (௧௬)

சிந்தாமணியுஞ்செழுங்காமதேனுவுந்தேம்பொழிபூஞ்
சந்தானமுங்கொடைகற்றதுநின்கைத்தலங்கண்டன்றோ
மந்தாகினிவந்தசெஞ்சரணம்புயன்மார்பில்வளர்
நந்தாவிளக்கின்சுடரேகணமங்கைநாயகியே. (௧௭)

கானவழிக்குத்துணைகோல்விடஞ்சிகணபெருமைத்
தானவழிக்குத்துணைசெம்பொன்றூண்டசமரிலடும்
மானவழிக்குத்துணைதாளேமுத்திவளநகர்போம்
ஞானவழிக்குத்துணைநீகணமங்கைநாயகியே. (௧௮)

கவிக்குங்கமகனுக்கும்வாதிவாக்கிக்குங்கன்னித்தந்தோ
துவிக்குநின்றூர்வணக்கின்னோநின்சந்நிதிசேவித்துக்கை
குவிக்குந்தொழும்பர்பெருமைசொல்வாரொவர்கூர்வடிக்கும்
நவிக்குமொப்பாங்கண்மயிலேகணமங்கைநாயகியே. (௧௯)

கனைகுரற்சில்லரிநூபுரத்தாளிற்கவரிபங்கன்
புனைதருகூறையுமின்றிக்கபாலத்திற்பூத்தபல
மனைவயிற்போயிரந்தாவென்னம்மேயுன்னைவாழ்த்திலனே
நனைமலர்க்கூந்தற்கிளியேகணமங்கைநாயகியே. (௨௦)

காட்டிருந்தாலுமகத்திருந்தாலுமிக்காசினியில்
வீட்டிருந்தாலும்வெளியிருந்தாலும்வியனாகின்

பாட்டிருந்தாலும்விரசாநதியின்பரமபத
நாட்டிருந்தாலுந்துணைநீகணமங்கைநாயகியே. (உக)

வான்மறவாதுகலாபமயூரம்வருங்கதிரைத்
தான்மறவாதுபுழைக்காலரவிந்தந்தண்ணென்மலர்க்
கான்மறவாதுகளிவண்டினீட்டமக்காரணம்போல்
நான்மறவேனின்னைக்கண்டாய்கணமங்கைநாயகியே. (உஉ)

கொடுங்காமன்வாளிதொடாமற்பெருநல்குரவரவம்
பிடுங்காமற்பாவம்பிடியாமன்ஞானப்பெருஞ்செல்வமே
ஒடுங்காமலற்பரைப்போற்றுமற்காலற்குளங்கலங்கி
நடுங்காமற்காத்தென்னையாள்வாய்கணமங்கைநாயகியே. (உ௩)

பயனுமறைவடிவாமால்சனகன்பதியிலுன்னை
வியனும்வதுவைபுரிநாளுன்பாதமிதித்தகல்லாய்
அயனுங்கிடக்கவகுத்தாலுமுத்தியையாள்வனம்மே
நயனாரவிந்தக்கொடியேகணமங்கைநாயகியே. (உச)

தேனேரவிந்தவீட்டிருந்தாயத்திருமனைக்கே
தானேதிமத்தினரசைப்பெற்றுயத்தநயனண்டம்
வானோர்களாதிச்சராசரமுற்றும்வகுக்கக்கண்டாய்
நானேநின்கீர்த்தியைச்சொல்வேன்கணமங்கைநாயகியே. ()

கோடகலக்கடற்பாரிற்சன்மோததிக்குண்டிற்றள்ளி
நீடகவாழ்க்கைத்திடரேற்றிஞானநெறிமயக்கி
ஆடகம்பெண்ணிலத்தாங்காதற்பேய்பிடித்தாட்டவென்கண்
நாடகம்பார்த்தனைநன்றேகணமங்கைநாயகியே. (உகு)

வாளுங்கணையும்பொருங்கண்ணருளைவழங்கியென்னை
ஆளும்படிநினைநீபத்தராவிக்குமாவியன்றோ
மூளுங்கருணையுடன்பணிவோர்மனனுண்முளைத்து
நாளுங்கதிக்குங்கரும்பேகணமங்கைநாயகியே. (உஎ)

முடியேறுங்கான்மலரல்லாற்பலமதமுந்தியென்னப்
பிடியேறுன்றுமமல்லாற்சிலதேவர்பிழைக்கதையைப்
படியேன்கனவிலுங்கேளேன்விழுந்துபணிந்தருமி
கடியேறுஞ்சந்நிதியல்லாற்கணமங்கைநாயகியே. (௨௮)

நீலக்கடாசலங்கூப்பிட்டகாலையினின்விளையாட்
டாலத்தைநேரெண்ணிவிட்டோடினவச்சுதானந்தனை
மூலப்பொருளல்லனென்றேபிரியுமுறைமைகண்டோ
காலப்பொன்றுடைதொட்டீர்த்தாய்கணமங்கைநாயகியே. ()

மஞ்சுக்கினகரனுங்காற்றுங்கூற்றுமறிகடலும்
விஞ்சுந்தழல்வடவாமுகமும்புவிமேலடங்கி
அஞ்சும்பரிசனைதாளையன்றேதெள்ளமுதமுங்கார்
நஞ்சுந்தழைத்தகண்மானேகணமங்கைநாயகியே. (௩௦)

வாடோறுந்தியுமிழ்வெய்யோன்முதற்பலவாந்தெய்வங்கள்
நாடோறும்வீழ்வர்கதிக்குக்கண்டாகனன்றன்னைப்புலி
நீடோறுமேற்சம்புநின்கேள்வன்பால்விட்டநீர்மையையென்
னாடோறுந்தாமறியாரோகணமங்கைநாயகியே. (௩௧)

கறையின்வெள்வாளேந்தைபின்காணடந்திலங்காபுரத்தில்
சிறையிருந்தாயென்பர்சியன்றிராவிடிற்றேவருமா
மறையினந்தாபதர்தாமுமிந்நாள்வரைவாழ்வர்களோ
நறையின்வண்டார்குழன்மாதேகணமங்கைநாயகியே. (௩௨)

புகைகிளர்வேற்கைச்சனகன்மகளென்னப்பூத்தமணி
வகைகிளர்செம்பொன்மவுலித்தசரதன்வாழ்மனைக்குத்
தகைகிளர்செல்வமருமகளென்னத்தவமென்செய்தார்
நகைகிளர்மாமுகக்கொம்பேகணமங்கைநாயகியே. (௩௩)

ஆலிலனந்திற்பசுந்தோகையிலையிராவதமா
மாவிலொருசில்லியந்தேரிற்புட்பகமானந்தன்னில்

மேனிலவித்திரிவோர்வாழ்வரோநின்விருப்பிலையேல்
நானிலம்போற்றுந்திருவேகணமங்கைநாயகியே. (௩௪)

அகிலமெல்லாமொருவன்காத்தருளவருள்வைசிலர்
துகிலனத்தின்பொருட்டாலேயொருவன்சுடர்ச்சிவிகை
செகதலத்தேந்தச்செய்வாயுன்விநோதத்தைச்செப்புவதார்
நகிலசலம்பொருபொன்னேகணமங்கைநாயகியே. (௩௫)

மீவாய்மதியங்குருவைநிந்தித்தவிதமதித்தோ
பூவாயநின்மனைகண்டாலடைக்கும்புதுமைசொல்லாய்
காவாயெனப்பணிவோர்தஞ்சனனக்கடலுக்கொரு
நாவாயனையபொற்பாவாய்கணமங்கைநாயகியே. (௩௬)

தோன்றுமவனிமடந்தையைச்சென்னிசுமந்துநுங்கிக்
கான்றுமனந்தனனென்றல்லவோசெங்கணனைத்தெண்ணீர்
சான்றபிறந்தகத்தேகுடியாக்கினைதாழ்ந்தவர்க்கெஞ்
ஞான்றுமதரிக்குந்தேனேகணமங்கைநாயகியே. (௩௭)

தும்பிபன்னுண்மலர்போமென்பரொன்கட்சுரும்பின்குணம்
பம்புவிற்காலுன்பரிபுரச்சீறடிப்பற்பமல்லால்
அம்புவிமேலொன்றைப்பாராதென்றுேலவண்டம்பெற்ற
நம்பிதனக்கொருதாயேகணமங்கைநாயகியே. (௩௮)

கேணல்லகேள்விவடிவாமுன்கோயிலுக்கேடக்கும்
தாணல்லதாளுன்னிருசரணும்புயந்தம்மைத்தொழும்
தோணல்லதோளுன்பெருங்கீர்த்திபாடித்துதித்திருக்கும்
நாணல்லநாண்மற்றவென்காண்கணமங்கைநாயகியே. (௩௯)

தடத்தோகைவாருளைமாவாய்வருமெந்தைதானுனைத்தன்
இடத்தோகையாவன்பினுண்மணமேசெய்தினிதிருக்கும்
திடத்தோகையாலல்லவோகடலார்க்குஞ் செயற்கைகண்டாய்
நடத்தோகையேபொற்குயிலேகணமங்கைநாயகியே. (௪௦)

பாலாழியோதிருவைகுந்தமோமதுபாய்கஞ்சமோ
மாலாகமோசனகேசன்றசாதன்வாழ்மனையோ
மேலானவுள்ளமிலாத்தமியேன்மனம்வீற்றிருந்தாய்
காலாரணத்தின்கொழுந்தேகண்ணமங்கைநாயகியே. (௪௧)

குடலைச்செந்நீரைக்கலிக்குங்குரம்பையைக்கூர்மயிர்த்தோற்
படலைச்சலமலப்பீற்றற்றுருத்தியைப்பாவமுடை
உடலைப்புவியிலெடுத்தெடுத்தின்னமுளந்தளர்ந்து
நடலைப்படாதென்னையாள்வாய்கண்ணமங்கைநாயகியே. (௪௨)

சுறுக்கொடிவேளுன்மகனாதலாலஞ்சுகப்பரிபூர்ந்
நிரைபொருதன்காரளிநாண்கன்னல்வில்லிமிழ்த்துமணம்
அறக்குலப்பூங்கணைவிட்டலைக்கேழையுமாளக்கற்றான்
நறுந்தளிர்ப்பூங்கொந்தளத்தாய்கண்ணமங்கைநாயகியே. (௪௩)

வான்செய்திடுமுபகாரத்திற்கென்னகைம்மாறுடைங்கூழ்
தான்செய்திடுமந்தத்தன்மையைப்போற்சந்ததமுமடி
யேன்செய்தபல்பிழையும்பொறுத்தாண்டனையிங்கிதற்கு
நான்செய்யுமாறுனக்குண்டோகண்ணமங்கைநாயகியே. (௪௪)

விரகங்களாசைசலராசிமூழ்கிவிலைமடமா
நரகங்களிற்சுழல்வார்சிலரவ்வின்பத்தாசையில
வரகங்களைச்செலுத்தாமற்சற்றேயுனைவாழ்த்தினரேல்
நரகங்கள்பாழ்படவாவோகண்ணமங்கைநாயகியே. (௪௫)

விதியிருநான்குருகன்பன்னிரண்டுவிமலவுமா
பதியொருபானைந்தரியாயிரம்பொற்படவரகன்
வதியிரண்டாயிரங்கண்பெற்றதுமுன்வடிவழகின்
நதியினைச்சேவிக்கவன்றோகண்ணமங்கைநாயகியே. (௪௬)

பொங்காதரவினிலங்காத்தாமரைப்பூவருநம்
சங்காழியான்பதமேல்வந்ததெய்வச்சலமென்றன்றே

கங்காநதியைச்சிவன்சடைக்காட்டினிற்கட்டினன்காண்
நங்காய்முன்கைத்தலைச்சங்காய்கண மங்கைநாயகியே. (௪௭)

வெங்களநஞ்சுமிழ்பேழ்வாய்ப்பஃறலைவில்லுரகம்
திங்களைத்தொட்டுவிழுங்கியுங்காலவதன்செவ்விமுகப்
பங்கயத்திற்கிணையென்றல்லவோகற்பகப்பிள்ளையே
நங்களையாளுந்திருவேகண மங்கைநாயகியே. (௪௮)

வானப்பிரகாசச்சுடராம்பரிதிமதியும்புவித்
தானப்பிரகாசச்சுடரும்புறவிருடான்வெல்லவல்
லானப்பிரகாசச்சுடர்காணெப்போதுமகவிருட்கு
ஞானப்பிரகாசச்சுடர்நீகண மங்கைநாயகியே. (௪௯)

முடங்கொண்டகாலின்கொழும்பாட்டளிதுதைமுண்டகப்பூ
தடங்கொண்டநீரிலொருதாளினிற்குந்தவத்தைக்கண்டோ
இடங்கொண்டிருந்தனைசெவ்வரிகொண்டருளெந்தைநெஞ்சை
நடங்கொண்டகெண்டையங்கண்ணாய்கண மங்கைநாயகியே. ()

சேணின்குரிசில்விதிமுனிவோர்பலதேவராராப்
பூணின்சிவன்பதமுங்குன்றுமூழியின்போதினுந்தான்
வாணின்கொழுநன்பதமுலவாதஃதுன்மங்கலப்பொன்
நாணின்பெருமையலவோகண மங்கைநாயகியே. (௫௧)

எவரசவாதம்புரியினுங்கப்பலிவரினுந்துங்
கவரசரோவல்செய்தாலுமென்றுமங்கவருக்குன
துவரசரோசக்கண்பார்த்திலையேற்செல்வந்தோன்றுமதோ
நவரசநூல்வனக்கொம்பேகண மங்கைநாயகியே. (௫௨)

தீவினைவாயினுரகஞ்சுமந்தசெகதலமேன்
மீவினைசெல்வச்சுவர்க்கமிவ்வண்டவிசாலமெல்லாம்
நீவினையாடொருசிற்றிலன்றோபத்திநீர்மையிலேன்
நாவினையாடுபதத்தாய்கண மங்கைநாயகியே. (௫௩)

வேதங்கிடந்தபொருளறியாதநின்மென்கமல
பாதங்கிடந்தசிலம்பென்னடாக்கியம்பல்லணிற்றம்மா
சீதங்கிடந்தமலர்மேற்கிடந்துபண்டேன்மிழற்றும்
நாதங்கிடந்தகுழலாய்கணமங்கைநாயகியே. (௫௪)

தோட்டலர்வண்டுளவப்பெருமாலின்சுணங்கலர்ந்த
மோட்டிளக்கொங்கைக்குநேராகுமோவெனமுன்னியன்றே
பாட்டளிகோடிபுரண்மததாரைப்பகட்டின்கொம்பை
நாட்டிலொடித்தனன்கண்டாய்கணமங்கைநாயகியே. (௫௫)

வான்மலர்ப்பூவகைக்கெல்லாமொருகந்தம்வைகலுமுன்
தாண்மலர்க்கென்னடுதமைபொற்கொன்றையுந்தாமரையும்
நீண்மலர்வான்கற்பகப்பூவுந்தோடவிழ்நீபமுரு
நாண்மலருங்கமழுங்காண்கணமங்கைநாயகியே. (௫௬)

முத்தினமாலைகுலாவிக்கிடந்தவுன்றூரிக்கிரி .
பத்தினமுகிலைப்போல்வானன்றேசிறம்பாலில்வெளுத்
சத்தினம்வேலையின்றூழ்கியுங்கோயிற்றுறங்கலித்தும்
ரத்தினமாற்றுந்தவங்காண்கணமங்கைநாயகியே. (௫௭)

பொன்மணிதாருடரிதம்பியான்பிறைபூவெண்சங்கும்
மென்மதுரத்தெள்ளமுதம்பயோததிவிசிபத
தன்மகளாமுனக்கேசீதனமென்றுதானல்லவோ
நன்மலர்மாளிகைவாழ்வாய்கணமங்கைநாயகியே. (௫௮)

கூறும்பிரமன்முனிவோர்சுரர்சென்னிகோடிபட்டோ
விறக்கருமமறியேன்மனக்கல்லின்மேன்மிதித்தோ
வுறஞ்சுரும்பின்மலராவுன்காலிணைசிவப்பு
நாறுக்தினமதென்சொல்வாய்கணமங்கைநாயகியே. (௫௯)

தவமோவயர்கிலனின்பேர்நினைக்கிலன்சத்தமும்
பவமோமறக்கிலன்போபடைக்கிலன்பாவையர்கள்

அவமோகம்விட்டிலனெவ்வண்ணமோவென்னை யாண்டனையெ
நவவோதிமநடைப்பெண்ணே கணமங்கைநாயகியே. [ன்

பூட்டாமலின்னமின்னார்மால்விலங்கைப்பொருநரகிற்
கூட்டாமற்றுன்பக்கடலிற்றள்ளாமற்கொடும்பிணியால்
வாட்டாமன்ஞாலத்தொருதாய்வயிற்றில்வரும்பிறட்பை
நாட்டாமலாள்வதெந்நாளோகணமங்கைநாயகியே. (சுக)

சீதளம்பூத்திருமான்பூத்தநின்முகத்திங்கள்கண்டெப்
போதுமென்சிந்தையரவிந்தமேகளிப்பூப்பதென்றோ
வேதமும்வேதப்பொருளும்பொருளின்விளக்கமுமந்
நாதமுமானகுயிலேகணமங்கைநாயகியே. (சுஉ)

தாளப்பணைமுலைமின்னார்விரகத்தழற்கொழுந்து
மூளப்பவப்புகையென்மனவீட்டினைமூடிற்றினி
ஆளத்திருவுள்ளமானலருண்மழையாலவிப்பாய்
நாளச்சததளக்கையாய்கணமங்கைநாயகியே. (சுரு)

பூபதியாயினம்வீரம்படைத்தனம்பொன்னின்செல்வச்
சோபனந்தேடினநாமென்பர்நீயன்பிற்சூட்டிரவல்
ஆபரணங்களென்றெண்ணொன்மாயமலர்ந்தபற்ப
நாபனையாளுங்கிளியேகணமங்கைநாயகியே. (சுச)

சேவிக்கும்பத்தர்பவக்காட்டினைச்சுடுஞ்செந்தழலுன்
காவிக்கருங்கண்ணருளவ்வருளினைக்கவ்வைமுந்நீர்ப்
பூவிற்பலவருந்தண்ணளியென்னப்புகல்வதென்றோ
நாவிக்குழற்பெண்ணமுதேகணமங்கைநாயகியே. (சுரு)

வேரிமலர்த்துளவன்மேனிபோலுநின்மென்மலர்ப்பூந்
தாரினளகத்தினைப்போலுங்காளாயுன்றுயகமொப்
பாரிபிடித்தல்லவோவேண்டினபுனல்பாலிக்குங்கான்
நாரியர்தங்கட்கரசேகணமங்கைநாயகியே. (சுசு)



வற்றாதசன்மக்கடலிற்றிளைத்துவருந்துவெனின்
பொற்றாமரைச்சிற்றடிக்கணைகாண்பதெப்போதுசொல்வாய்
முற்றுமல்லிம்பிச்செஞ்சந்தனச்சேற்றினின்றூழ்கிமுத்தின்
கற்றாமமேர்துந்தனத்தாய்கண்ணமங்கைநாயகியே. (சுஎ)

நீயேயெவருக்கும்வாழ்வருள்வாயென்றுநின்மறையன்
பாவேபுகழுமுனைப்பணியாதிலம்பாட்டைத்தள்ளப்
பேயேயமன்னைத்தாழ்வாரொன்றுநம்பிரமனுக்கும்
நாயேன்றனக்குமோர்தாயேகண்ணமங்கைநாயகியே. (சுஅ)

பாகுபழுத்தகுமுதமுமுல்லையும்பைங்குமிழும்
மாகவிலத்தெள்ளமுதேதாற்பலமுமணக்குமொரு
கோகனகத்தைமுகமெனப்பேரிட்டுக்கொண்டதென்றே
நாவினைத்திங்கட்கொழுந்தேகண்ணமங்கைநாயகியே. (சுகூ)

பொன்றாபுரமிடுமுன்பாதகீர்த்திபொலிந்திலங்கும்
தென்றாலெல்லாந்தெய்வயாழொலிசக்கடிருச்செவிக்குப்
பன்றூய்கடாமிருப்பாணிகண்டாய்மயிர்ப்பாதியைநேர்
கன்றூய்பொருஞ்சிற்றிடையாய்கண்ணமங்கைநாயகியே. (எ0)

வினைவருத்துமின்றூர்காதற்பாதலம்வீழ்ந்தனென்மேல்
காணேனருட்கைகொடுத்தெடுப்பாயிருகண்மணிரு
வானோர்மண்டோதரிதன்றுணிழந்திடமங்கலப்பொன்
நாணைக்குஞ்சங்கத்திருவேகண்ணமங்கைநாயகியே. (எக)

காரின்கல்வாய்ப்பட்டுவாரிநன்னீர்படுங்காரணம்போல்
சீரும்பொருளுமணக்குஞ்சதுமறைத்தேனுதி
ஆருஞ்செவியிலென்பாவிடம்பட்டமுதாகச்சொல்வேன்
காருந்தியமுக்கனியேகண்ணமங்கைநாயகியே. (எஉ)

மாமானவில்லணிசெங்கைபெம்மானுன்கண்மானிணைக்குத்
தாமானுமோவெள்ளமுன்மானையேபெய்தனனென்றன்றே

காமாவினம்பயர்தீராதரவிடங்காத்ததுகாண்
நாமானும்போற்றும்பொன்மானேகணமங்கைநாயகியே. (எ௩)

ஏவுங்கதிர்வடிவேலும்பொருமுன்னிருநயனம்
தூவுங்கருணைமழைத்துளியேபடிற்சொல்லுமன்பும்
தேவுங்குணமுநடையுமில்லாமரத்தின்பதிமை
நாவுங்கவிதைசொல்லாதோகணமங்கைநாயகியே. (எ௪)

ஆரணன்றிங்களங்கண்ணிச்சடிலனமரர்வெள்ளை
வாரணனுக்குமொருவனையாமுனைமன்பதையென்
காரணம்பொன்மிதிலைப்பெருமான்பெற்றகன்னியென்னும்
நாரணன்மார்பிற்கணியேகணமங்கைநாயகியே. (எ௫)

அல்லும்பகலுமென்னுண்ணிலஞானவளகந்தரக்
கல்லும்பொற்பாவாயிணையோவுன்பாதகமலமம்மா
புல்லுந்திருக்கண்ணிமையாதவற்புதப்பொன்னுலக
நல்லும்பரும்பணிகாவேகணமங்கைநாயகியே. (எ௬)

பிறவாதிருக்கினுமன்றிப்பிறக்கினும்பேரன்பினை
மறவாதிருக்கவரந்தருவாய்கண்ணன்மார்பிற்பொன்னே
அறவாழியேசெங்கமலாசனத்தினிலாரணங்கே
நறவாருங்கூந்தற்பிடியேகணமங்கைநாயகியே. (எ௭)

குரலைத்துளக்கிமயிலைவிருப்பிற்கொளப்புனல்வீழ்
சிரலிற்றவபத்தியஞ்சிறைகம்பித்தென்சிந்தைப்புள்ளு
நிரலைப்புரியருண்மீன்கவர்வானுன்னெடுங்குணத்தின்
நரலைக்கண்வீழ்வதென்நாளோகணமங்கைநாயகியே. (எ௮)

சொல்லரிதாமந்தரமாமுலையைச்சுமந்துமலர்ப்
பல்லரிவேள்பொருஞ்சிற்றிடைவாடுதல்பார்த்தலவோ
வல்லரிநேர்பதநூபுரமோலிடுமாலைசொல்லாய்
நல்லரிபூத்தநிறத்தாய்கணமங்கைநாயகியே. (எ௯)

கங்கைமுதனதிமாறாருந்ததிகல்லகத்தின்
மங்கைகலைக்கொடிமான்மகளிந்திரன்மாதுதினம்
சங்கையிலாவழகுங்கற்பும்பெற்றதகைமையெல்லாம்
நங்கையுன்றாள்பணிந்தன்றோகணமங்கைநாயகியே. (அ0)

என்றென்றுமுன்சரணம்புயந்தம்மையிருதயம்வைத்
தன்றன்றுசேவிக்குநாயடியேனையடற்கலியாம்
குன்றென்றுதான்பொரப்பார்த்திருந்தாயையகோவிதுதான்
நன்றன்றுகாண்பொன்னனமேகணமங்கைநாயகியே. (அக)

பாட்டிலிருக்கும்பொருள்போன்மதுரம்பழுத்தமறைக்
காட்டிலிருக்குங்கிளியாமுனைத்தவர்க்கைக்கொண்டுள்ளக்
கூட்டிலிருத்தினர்க்கல்லாற்பெருமைவைகுந்தத்திரு
நாட்டிலிருக்கவருமோகணமங்கைநாயகியே. (அஉ)

வில்லைதழுத்தமணிப்பொற்பரிபுரமெல்லடிப்பூ
அல்லதுவேறுதுணையில்லையென்னவடியன்மனக்
கல்லதனிற்றிருந்தாய்முற்றுமப்படிகாத்தளிக்கில்
நல்லதுன்சித்தமென்னம்மேகணமங்கைநாயகியே. (அங)

மீறுதகக்கொடுங்கானகமாமலைமேலமர்ந்த
தாறுதருந்தவஞ்செய்வரொன்றுமுன்சரண்பணியார்
ஆறோர்கண்முத்தித்தசைகாண்பரோதெள்ளறிவிலை
ஞாறோதநியிலமுதேகணமங்கைநாயகியே. (அச)

எந்தவுலகிருக்குந்தினஞ்செல்வமெல்லாமருளும்
சுந்தரியென்பதறியாள்கொலோவறுமையையென்பாள்
அந்தமணிப்பணிபொன்னுடையுமுன்னளித்தனள்காண்
கந்தமருந்தவப்பேறேகணமங்கைநாயகியே. (அரு)

மேலானவைகுந்தவீட்டுக்கருளின்விளங்குமொரு
மாலாகுமாறுக்குமாலாக்குமுன்குழன்மாலைதமிழ்

நாலாலனுதினநானூற்பதுபற்பநாலினத
லூலாயனைவிக்குந்தகைத்தேகணமங்கைநாயகியே. (அசு)

சுரலோகமுஞ்சங்கரலோகமுமலர்த்தோன்றலின்சுந்
தரலோகமுந்தந்திரலோகமும்பலதாரகையின்
வரலோகமுஞ்சலபுற்புதமுன்னருள்வாய்ந்திடலிந்
நரலோகமேமுத்தியன்றோகணமங்கைநாயகியே. (அஎ)

விஞ்சுமுனதருளின்றியநாடெய்வவின்னமுதம்
செஞ்சுந்தரக்கன்னலும்பாலுங்கைக்குஞ்சிறக்கிலெட்டிப்
பிஞ்சுங்கதிரரவாயிலைவேம்புப்பெருங்கடலின்
நஞ்சுமதுரித்திடுங்காண்கணமங்கைநாயகியே. (அஅ)

கூரப்புவிபொன்மடவார்கள்காதற்குணத்ததுவி
சாரக்கனலின்மெழுகாயென்சிந்தைதளருங்கொலோ
ஆரக்குலந்தெண்டிரைக்கரத்தாலெறியாழித்தண்ணென்
நாரத்தில்வந்தவணங்கேகணமங்கைநாயகியே. (அகூ)

பார்மேலுன்கீர்த்தியையுள்ளத்தெழுதிடும்பத்தர்க்கெல்லாம்
தார்மேல்வருந்திருநான்முகத்தோன்கைத்தலவெழுத்தை
நீர்மேலெழுத்தெனக்கண்டாய்கைம்மாறுநினக்குளதோ
நார்மேன்மணக்குமனத்தாய்கணமங்கைநாயகியே. (கூ0)

கையுந்தலையுமிருதாளுநாவுங்கருத்துந்தொண்டு
செய்யும்படிகண்டனையேற்சனனத்திருக்ககற்றி
உய்யுந்துணைக்குலகந்தவங்கோடியுஞற்றிமனம்
நையுங்கதிசற்றும்வேண்டேன்கணமங்கைநாயகியே. (கூக)

சேயென்பதுபிழைசெய்யினும்பெற்றதிருவயிற்றுத்
தாயன்பினைமறவாளெனல்போலத்தமிழறியாப்
பேயன்புரிபிழையும்பொறுத்தாளிற்பெருமையுளை
நாயன்கருத்தில்விளக்கேகணமங்கைநாயகியே. (கூஉ)

வாளையுந்தெண்டிரைப்பாரினுன்னைவலம்புரியாத்
தாளையுங்கீர்த்தியைப்படாதநாவையுந்தாழ்ந்துதொழாத்
தோளையுஞ்சென்னியையும்பாரில்வீணிற்சுமந்துபல
காளையும்பாழிற்கழித்தேன்கணமங்கைநாயகியே. (கங)

தடந்தாமரைப்பெண்ணமுதேயுனதிருதண்டரள
வடந்தாழ்முலைக்கிணையென்றல்லவோபலவண்டுசூழ்
கடந்தாழ்கவுள்வரைக்கூக்குரல்கேட்டணைத்தினெந்தை
நடந்தாண்டனனென்னலையேகணமங்கைநாயகியே. (கச)

சொல்லுஞ்சுருதியில்வாழ்சிற்றடியுந்துடியுங்கொங்கை
வல்லுந்துணைவில்லுந்தண்ணருட்கண்ணுமதியுங்குழல்
அல்லுந்தரிசிக்கிற்கல்லுங்கரைந்தமுதாகுங்கண்டாய்
நல்லுந்தியாழின்மொழியாய்கணமங்கைநாயகியே. (கரு)

மானச்சுருதியன்மார்பழகாங்கடல்வாயமுதம்
கானச்சுருதிக்கரும்பிற்செஞ்சாறுகணதவத்தின்
மோனத்துறவரிதயாரவிந்தமுருகவிழ்தேன்
ஞானத்தருக்கனியானாய்கணமங்கைநாயகியே. (கசு)

வேயேபொருமிருதோண்மயிலேசிவன்வேதனுக்கும்
தாயேமெய்ஞ்ஞானக்கடலமுதேசெந்தமிழினட்போல்
வாயேகருணைபழுத்தகொம்பேமணிமாலிகையே
நாயேன்பயந்தவிர்ப்பாயேகணமங்கைநாயகியே. (கஎ)

நெட்டாழியாரமுதம்போன்மதரிக்குநின்மறைக்கும்
எட்டாதபாதமென்புன்பாட்டடக்குமியல்புளதே
கிட்டாததேவர்குலப்பூந்தருவைக்கிளர்புவிமேல்
நட்டான்பெருமைக்கழகேகணமங்கைநாயகியே. (கஅ)

சோணாடுங்காவிரியாறுங்கணமங்கைத்தொன்னகரும்
சேணுதவனைத்தொழுங்கோயிலுமுன்றிருவழகும்

காணுதிருக்கவும்நாயடியேனிருகண்ணின்முன்னே
நாளுநிற்குமென்சொல்வேன்கணமங்கைநாயகியே. (கூகூ)

பேயாமறிவினென்புன்கவிமாலைபெருநுமெச்சில்
வாயாலுரைத்தனெனுயினுங்கீர்த்திக்குமாசிலைகாண்
ஓயாமுழக்கினலையெறிகங்கையுதகத்தினை
நாயானதுண்ணிற்பழுதோகணமங்கைநாயகியே. (க00)

செந்திருமங்கையபிடேகவல்லித்திருவடியில்
பைந்தமிழ்மாலைபுனைந்தான்களந்தைப்பதிப்பகலான்
மைந்தன்குருகைவருகாரிமாறமகாமுனிவன்
தந்தருள்கல்விக்கவிவீரராகவன்ருரணிக்கே. (க0க)

திருக்கண்ணமங்கைமாலை

முற்றிற்று.

---

ஆழ்வார்கள் திருவடிகளே

சரணம்.

---

## புத்தகவிளம்பரம்.

---

இதனடியிற்குறித்த புத்தகங்கள் சென்னபட்டணம் முத்தியாலுபேட்டை தம்புசெட்டியார் வீதி கீழண்டைவாடை 289-வது கதவிலக்கமுள்ள கலாரத்நாகரம் என்னும் அச்சுக்கூடத்தில் ஊ-புஷ்பரத செட்டியாரிடத்தில் விலைக்கு வாங்கிக்கொள்ளலாம்.

சடகோபரந்தாதி ... ... ... ... 0—0—9
திருவேங்கடக்கலம்பகம் ... ... ... 0—1—6

| | R. A. P. |
|---|---|
| திருக்கண்ணமங்கைமாலை ... ... ... | 0—0—9 |
| கஜேந்திரமோக்ஷம் ... ... ... ... | 0—0—9 |
| எம்பிரான்சதகம ... ... ... ... | 0—1—0 |
| கோவிந்தசதகம் ... ... ... ... | 0—0—9 |
| ‡ திருவரங்கத்துசத்திருநாமம்... ... ... | 0—0—9 |
| ‡ திருவரங்கக்கலம்பகம் ... ... ... | 0—1—3 |
| ‡ திருவரங்கத்துமாலை ... ... .. ... | 0—0—9 |
| ‡ திருவரங்கத்தந்தாதி .. ... ... ... | 0—0—9 |
| ‡ திருவேங்கடமாலை ... ... ... ... | 0—0—9 |
| ‡ திருவேங்கடத்தந்தாதி ... ... ... | 0—0—9 |
| ‡ நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி ... ... | 0—0—9 |
| ‡ அழகரந்தாதி ... ... ... ... | 0—0—9 |
| ஷை சடகோபாந்தாதி முதலாகிய 14 - புத்தகங்களும் ஒன்றய்க்கட்டியது... ... | 0-10—0 |
| ஷை 14 - புத்தகங்களுள் இக் ‡ குறியிடப்பட்ட புத்தகங்கள் திவ்வியகவி பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் அஷ்டப்பிரபந்தங்கள் இவை ஐயங்கார் சரித்திரத்துடன் ஒன்றாகக்கட்டியது ... ... ... | 0—6—0 |
| ஸ்ரீவிஷ்ணுபுராணம் வசனம் கித்தான் பவுண்டு | 1-14—0 |
| ஷை ஷை ஆப்பவுண்டு | 1-12—0 |
| நாலாயிரப்பிரபந்தம் ... ... ... | 1-12—0 |
| குசேலவர் கீர்த்தனை ... ... ... ... | 0—8—0 |
| விஷ்ணுதூஷணபரிகாரம் ... ... ... | 0—2—0 |
| கண்ணிநுண்சிறுத்தாம்பு தெலுகு ... ... | 0—6—0 |
| ஷை தமிழ் ... ... | 0—6—0 |
| குருபரம்பரைப் பிரபாவம் (தெலுகு வசனம்.) | 1—0—0 |
| இராமானுஜநூற்றந்தாதி (தெலுகு) கித்தான்பவுண்டு ... ... ... ... ... | 0-10—0 |
| ஷை ஷை ஆப்பவுண்டு... | 0—8—0 |